# மத நம்பிக்கை வேண்டும்.



ஆசிரியர் :

T. சிவஞானம், B. Com..

விலை 0-60 பை.

முதற் பதிப்பு
ஏப்ரல் 1970

# முன்னுரை.

வேதாந்த மார்க்கத்தில், தலை சிறந்தது நம்நாடு. இக்கால நம்நாட்டு இளைஞர்கள் மதம், வேதாந்தம் என்பன பற்றி நன்கு அறிந்து பிறருக்கும் எடுத்துக் கூறும் நிலை ஏற்பட வேண்டும். இந் நாட்டில் பரவியுள்ள நாத்தீக போக்கும், அறியாமையும் நீங்கி, உண்மை ஓங்க வேண்டுமென்ற எண்ணத்துடன் இச்சிறு நூலை அடியேன் வரைந்தேன். இளைஞர்கள் விரும்பிப் படிக்கும் விதத்தில் கருத்துக்கள் எளிதாகவும், சுருக்கமாகவும், துரிதமாகவும் எடுத்துக் கூறப்பட்டுள்ளன பிழைகள் இருப்பின் பெரியோர்கள் பொறுத்தருள்க! கருத்துக்களை பகுத்தறிவுக்கு விளக்கி இருப்பதால் இப் புத்தகம் பலருக்கும் பயனுள்ளதாக ஏற்றவாறு இருக்குமென்று கருதுகிறேன்.

வணக்கம்.

T. சிவஞானம்

2, இடையர் தெரு,
தென் கரை,
பெரியகுளம்.

# மதிப்புரை.

மனிதப் பிறவியின் இறுதி லட்சியம்-ஒரே லட்சியம்-ஒன்று உண்டு. அதனை மனிதன் எப்பிறவியிலாவது இறுதியாக அடைவதைத் தவிர வேறு வழியே இல்லை. அந்த லட்சியத்தை அடைவதற்கு ஒரே வழிகாட்டியாய் இருப்பது மதம். மதத்தைத் தவிர வேறு எதுவும் இறுதி லட்சியத்தை அடைவதற்கு உதவியாக இருப்பதாக உலகில் வேறு எதுவும் இல்லை. இறைவன் உண்டா! இல்லையா! என்ற பிரச்சனை மனித இனம் தோன்றிய காலம் முதற்கொண்டே தொடர்ந்து இருந்து வருகிறது. இறைவன் உண்டு என்பவர்களுக்கும், இல்லை என்ற பகுத்தறிவாளர்களுக்கும் தர்க்கரீதியில் விவேகமான விளக்கம் தருவது மதமே; அத்தகைய மதத்தின் அவசியத்தையும் அதன்மேல் மனித இனம் கொள்ள வேண்டிய நம்பிக்கையின் அவசியத்தையும் மிகத் தெளிவாக விளக்குகிறது இச் சிறு நூல். இதனை ஆக்கியவர் மிக எளிய நடையில் சிக்கலான விஷயங்களை பல மேற்கோள்களுடன் தெளிவாக துலக்கியிருப்பது மிகவும் பாராட்டுதற்குரியது. பகுத்தறிவும் இயற்கையும் தான், உலகில் தானே செயல்படுகிறது என்று கூறுவதை நாகரீகமாகக் கருதப்படும் இக்காலத்தில் மதத்தைப் பற்றியும், இறை ஆட்சியைப் பற்றியும், விஞ்ஞான ரீதியில் நல்ல விளக்கம் தரும் இச்சிறு நூல் குறிப்பாக பள்ளி மாணவர்களுக்கு மிகவும் பயன்படுவதாக இருக்கின்றது; பள்ளி மாணவர்களும் ஏனையோரும் இதனை வாசித்து வாழ்க்கையில் பெரும் பயனை அடைவார்களாக!

பெரியகுளம் — G. K சேதுரத்தினம், B.A., B.L.,

11—4—70 — அட்வகேட்.

# மதிப்புரை.

உலகில் மக்கள் சிந்தனை வளரத் தொடங்கிய காலத்தி லிருந்தே உணர்ச்சியும் நம்பிக்கையும் வளர்ந்துவந்திருக்கிறது. இன்றுவரை மதத்தில் நம்பிக்கை உடையவரே மக்களிற் பெரும் பான்மையினராவார். நம்பிக்கை என்ற அடிப்படையிலேதான் சமயமென்னும் கட்டிடம் எழும்ப முடியும் என்பதை சமயத் தலைவர்கள் வரலாறுகள் காட்டுகின்றன. அன்பர் திரு ஞா. சிவஞானம், அவர்கள் தம்பட்டறிவால் (அனுபவத்தால்) தோன்றிய கருத்துக்களுக்கு உருவம் கொடுத்து 'மதநம்பிக்கை வேண்டும்' என்ற இந்நூலை யாத்துள்ளார். தாம் நம்புவ துடன் பிறர்க்கும் நம்பிக்கை ஊட்டவேண்டும் என்ற ஆர்வத் துடன் எழுந்த இந்த முதல் முயற்சி மிகப் பாராட்டத்தக்கது. அரைகுறை நம்பிக்கை யுடையவர்களை முழு நம்பிக்கை கொள்ளும்படி இந்நூல் செய்கின்றது, பயன் தரும் நூல்.

பெரியகுளம்
10—4—70

இங்ஙனம்,
புலவர்: **வி. சிவக்கொழுந்து.**

# மத நம்பிக்கை வேண்டும்.

மனிதனுக்கு மத நம்பிக்கை அவசியமே. ஒருவன் எந்த மதத்தைச் சார்ந்தவனாக இருந்தாலும், அவன் கடவுளிடம் இரண்டறக் கலக்கும் வரை மத நம்பிக்கை கொண்டு இருப்பது அவசியம். உலக வாழ்வுக்கும், பரவாழ்வுக்கும் மத நம்பிக்கையே அடிப்படை. நம் தமிழ்நாட்டில், இக்காலத்தில்-இன்றைய தலைமுறையினரிடம்--மத நம்பிக்கை குறைவாகக் காணப்படுகிறது. குறிப்பாக, நமது தமிழ்நாட்டு மாணவமணிகள்—அவர்கள் இந்துக்களாக இருந்தாலும், கிருஸ்தவர்களாக இருந்தாலும் அல்லது முகம்மதியர்களாக இருந்தாலும் சரி—தங்கள் தங்கள் மதத்தின் மீது நம்பிக்கை குன்றியவர்களாகக் காணப்படுகின்றார்கள்.

இதற்கு சினிமா, நாடகங்கள் போன்றவை முக்கியமான காரணங்கள் ஆகின்றன. அவைகள் நல்ல வழிகளில் உபயோகப்படுவது சிறிதளவே ஆகின்றன மக்களின் கீழான உணர்ச்சிகளைத் தூண்டவும் தூய எண்ணங்களைக் குறைக்கவும் இவை ஏதுவாக இருக்கின்றன; தற்காலத்தில் நடத்தப்பட்டு வரும் பகுத்தறிவுப் பிரச்சாரமும் மற்றொரு காரணம் ஆகின்றது. 'மனிதன் பகுத்தறிவு படைத்தவன்—அவனுக்கு நல்லது கெட்டது ஆராயும் அறிவு உண்டு; ஆகவே கண்மூடித்தனமாக பிறர் சொல்வதை நம்பி நடக்க வேண்டிய அவசியம் இல்லை—தனது அறிவையே அவன் நம்பி நடக்க வேண்டும்'—என்று பகுத்தறி[illegible] பிரச்சாரம் செய்யப்பட்டது. இப்படிப்பட்ட பிரச்சாரமும் சில காலத்திற்கு முன்பு தமிழ்நாட்டிற்குத் தேவைப்பட்டது அவசியமும் நியாயமும் ஆகும். ஆனால் இப்படிப்பட்ட பிரச்சாரங்கள் இன்று பலனற்றதாகப் போய் விட்டன.

சில வருடங்களுக்கு முன்பு, தமிழ்நாட்டில் மத நம்பிக்கை ஒரு குருட்டு நம்பிக்கையான அளவுக்கு

வளர்ந்து இருந்தது. அந்த நம்பிக்கையை வைத்து அநேக எத்தர்களும்,வேஷதாரிகளும் மக்களை ஏமாற்றிப் பிழைத்து வந்தனர். அப்படிப்பட்ட நேரத்தில் இப்படிப் பட்ட பகுத்தறிவுப் பிரச்சாரம் ஒரு நல்ல அறிவுச் சிகிச்சையாக இருந்து, மக்களது கண்களைத் திறக்க உதவியது. அதற்காக பகுத்தறிவுப் பிரச்சாரகர்களை நாம் போற்ற வேண்டும். இந்த இடத்தில் பகுத்தறிவுப் பிரச்சாரகர்கள் வேறு, நாஸ்தீகர்கள் வேறு என்பதைக் கவனித்துக்கொள்ள வேண்டும்.

மக்கள் மதத்தைப் பற்றிய தப்பான அபிப்பிராயம் கொண்டு இருந்தனர். மதம் என்பது என்ன, பகுத்தறிவு படைத்த மனிதனுக்கு மத நம்பிக்கை ஏன் வேண்டும், அப்படி நம்பிக்கை வேண்டுமென்றால் எந்த அளவுக்கு வேண்டும், அதனால் நாம் அடையும் நன்மைகள் எவை, தீமைகள் எவை,—என்பனவற்றை ஆராயாமல், மதத்தைப் பின்பற்றி வந்தனர்.

ஒருவன் உணவின் அவசியத்தையும், அளவையும், தரத்தையும் உணர்ந்து உட்கொள்ள வேண்டும். உணவு மிகுந்தாலும் குறைந்தாலும் நோய் உண்டாகும் அல்லவா? அதுபோல, மத நம்பிக்கை மிகுதியானதால், பலப்பல நோய்கள் உண்டாயின. பகுத்தறிவுப் பிரச்சாரம் என்னும் பேதி மாத்திரை தேவைப்பட்டது. இப்பொழுது மீண்டும் உடல் நலம் கிடைத்து விட்டது. எனவே பகுத்தறிவுப் பிரச்சாரம் என்னும் பேதி மாத்திரையின் அவசியம் தற்சமயம் தேவையற்றதாகிவிட்டது. குடல் சுத்தமான பின், நல்ல உணவு தேவைப்படுவது போல, மக்களுக்கு இப்பொழுது நல்ல மத நம்பிக்கை தேவைப்படுகிறது.

**பகுத்தறிவு என்பது யாது?** ஒவ்வொரு மனிதனும் தன் சூழ்நிலை, அறிவு, சந்தர்ப்பம், நிலைமைக்கு ஏற்ப எது நல்லது, எது கெட்டது என்பதைப்பற்றி ஆராய்ந்து பிரித்து அறியும் அறிவே பகுத்தறிவு எனப்படும். மனிதன் ஆறறிவு படைத்தவன். பகுத்தறிவு ஒன்றினு

லேயே மனிதன் விலங்கிலிருந்து வேறுபட்டவன். சந்தர்ப்பம் சூழ்நிலைக்கு தக்கவாறு மனிதனுடைய பகுத்தறிவு மாறுபாடாகவும் வித்தியாசப்பட்டும் அமைந்திருக்கும். படித்த மனிதன் பகுத்தறிவிற்கும். படிப்பில்லா மனிதன் பகுத்தறிவிற்கும் வித்தியாசமுண்டு; அதுபோல, யோக்கியனுடைய பகுத்தறிவிற்கும், அயோக்கியனுடைய பகுத்தறிவிற்கும் வித்தியாசமுண்டு. நீதிபதியினுடைய பகுத்தறிவிற்கும், குற்றவாளியினுடைய பகுத்தறிவிற்கும் வித்தியாசம் உண்டு. இப்படி பகுத்தறிவு பலவாருக இருப்பினும் உண்மையான பகுத்தறிவு ஒன்றே. உண்மையான பகுத்தறிவு என்பது, இறைவனின் சட்டதிட்டங்களுக்கு இசைந்தபடி அமைந்து இருப்பது தான். அதற்குமாருக இருக்கும் பகுத்தறிவெல்லாம் தள்ளுபடி செய்யப்பட வேண்டியவையே.

பகுத்தறிவு அடிப்படையான சில உண்மைகளை ஒப்புக்கொண்டு, பிறகு ஆராய ஆரம்பிக்கும். அதுபோல், அதனது எல்லையையும் தனது சக்திக்கு உட்பட்ட வரம்புக்குள் நிறுத்தி, அதைத் தன் ஆராய்ச்சி எல்லைக்குள் வைத்துக் கொள்ளும். நாம் கணித சாஸ்திரம் படிக்கிருேம். நாம் எந்த அளவுக்கு நினைக்க முடியுமோ, அந்த அளவிலேயே, நமது எண்ணிக்கையின் அளவுகளை அமைத்துக் கொள்கிருேம். ஆனுல், உண்மையில். எண்களின் ஆரம்ப முடிவுகளை நம் சிற்றறிவால் கணக்கிட முடியாது. எண்களிலேயே மிகச் சிறிய எண்ணை யாராவது நிச்சயிக்க முடியுமா? அதேபோல எண்களிலேயே மிகப் பெரிய எண்ணை கணக்கிட்டு அறிய முடியுமா? முடியாது. அதுபோல, கடவுளின் படைப்பில் ஆதியும், அந்தமும் மனிதனுடைய அறிவிற்கு அப்பாற்பட்டவை. அவற்றை மனிதனுடைய சிற்றறிவால் அளந்துவிட முடியாது.

"வன்பெரு நெருப்பினை புன்புழு பற்றுமோ?
வானை ஒரு மான் தாவுமோ?

என்று இராமலிங்க வள்ளலார் கூறி இருப்பதை இங்கு நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

***மதமும், வேதாந்தமும்.*** மதத்திற்கும் வேதாந்தத்திற்கும் வித்தியாசம் இருப்பதை உணர வேண்டும். மதம் நம்பிக்கையில் ஆரம்பமாகிறது. வேதாந்தம் ஆராய்ச்சியில் ஆரம்பமாகிறது.

***மதம்:-*** பெரியோர்களால்,அல்லது ஒரு தலைவரால், கடவுளை அடைய அமைத்துக் கொடுக்கப்பட்ட தனி விதிமுறைகள், ஒழுங்கு, நியமனம், அனுஷ்டானம் ஆகியவற்றிற்கு மதம் என்று பெயர். கடவுளை ஒரு கடல் போல் நினைப்போம். கடலில் பலப்பல நதிகள் கலக்கின்றன. பல நதிகளும் பல்வேறு இடங்களில் ஆரம்பித்து முடிவில் கடலை அடைகின்றன. அதைப் போல,மதங்களும் வெவ்வேறு ஆரம்பங்களைக்கொண்டு, கடைசியில் கடவுளை அடைகின்றன. மதங்கள், கடவுளின் சட்டங்களையும், தர்மங்களையும், பாப புண்ணியங்களையும்,சாதாரண மக்களும் அறிந்து, அவற்றை நம்பி நலம் அடைய செய்கின்றன. மதங்களுக்கு அடிப்படை, நம்பிக்கையே. ஒரு மகான் தோன்றி, மக்களுக்கு அவர் வகுத்துக் கொடுக்கும் தெய்வபாதை ஒரு மதமாகிறது. ஏசுநாதர் கிருஸ்தவ மதத்தை ஸ்தாபித்தார். நபிகள் நாயகம் இஸ்லாமிய மதத்தை தோற்றுவித்தார். இந்து மதம் ஒரு தனிப்பட்ட மகானுலோ, அவதார புருஷராலோ உருவாக்கப்பட்டது அன்று. இந்து மதம், வெகு காலத்திற்கு முன்பு இருந்து, பலப்பல சந்தர்ப்பங்களில் பல பெரியோர்களால் அநேக நிலைகளை அமைக்கப்பெற்று காலக்கிரமத்தில் உண்டாக்கப்பட்டது. இந்து மதத்தைப்பற்றி விளக்க அநேக நூல்கள் தகுதி வாய்ந்தவையாய் இருக்கின்றன. எனவே மதங்கள் பெரியோர்கள் கூறுவதை ஆதாரமாகக்கொண்டு, நம்பிக்கையின் பேரில் ஆரம்பமாகின்றன. இவ்வித நம்பிக்கை மூட நம்பிக்கை அல்ல.

**வேதாந்தம்** என்பது தெய்வீக ஆராய்ச்சியின் பயனுக, புத்திக்கும் நேர்மைக்கும் இசைந்த கருத்துக்களை தன்னிடத்தே கொண்டது. அங்கு நம்பிக்கைக்கு இடமில்லை. அறிவின் விளைவே வேதாந்தம். ''நியாயமும், தர்க்கமும் வேதாந்தத்தின் தலைவாசல்'' என்று கூறுவர். (Logic is the threshold of philosophy) வேதாந்தக் கருத்துக்கள் உண்மை என்னும் பாறை மீது அசையாதபடி கட்டப்பட்டு இருக்கும். அறிவிலும், ஆராய்ச்சியிலும் கண்டுபிடிக்கப்பட்ட முடிவுகளே அங்கு காணப்படும்.

வேதாந்தக் கொள்கைகள் மதத்தில் இருக்கும்; ஆனல் மதக் கொள்கைகள் வேதாந்தத்தில் காணப்படமாட்டா. நீதிக்கதைகள் மூலமாகவும், மறைமுகமாகவும், வேறு வழிகளிலும், வேதாந்தக் கொள்கைகளை, மதம் தன்னுடைய மக்களுக்கு போதிக்கும். அவை, வேதாந்தத்தை அறிய முடியாத மக்களுக்காக எடுத்து இயம்பப்படுகின்றன. உதாரணமாக, பிறர் பொருளை திருடினல். இறைவன் நரகத்தில் தள்ளி தண்டிப்பான் என்று மதம் கூறும். வேதாந்தக் கருத்தை நேரடியாக தெரிந்து கொள்ள முடியாத மனிதர்களுக்கு, மதக் கொள்கைகள் நேரடியாக புலப்படுகின்றன. இதற்காகவே மதத்தில் நீதிக் கதைகளும், உதாரண மேற்கோள்களும் காணப்படுகின்றன. நீதிக்கதைகளில் நரியும் காக்கையும் பேசிக்கொள்வதைக் காண்கிறோம். எங்காவது நரியும் காக்கையும் பேசிக் கொள்ளுமா? இவ்வாறு அமைத்தது, எளிய மக்களுக்கு கதையில் வரும் நீதியை எடுத்துக் கூறவே!

இயற்கையிலேயே, இந்த நிலையைத் தாண்டிய மக்கள், வேதாந்த தத்துவங்களில் நாட்டம் கொள்கின்றனர். இங்கு கொள்கைகள் நேரடியாகவே ஆராய்ந்து அலசப்படுகின்றன. இங்கு நம்பிக்கைக்கு இடமில்லை.

**இதிகாச புராணங்களும், நீதி நூல்களும்.** முன்னர் கூறியபடி மத நம்பிக்கையில் நீதிக் கதைகள் பிறந்திருக்

கின்றன. பழைய பெரிய மதங்களில், இதிகாச புராணங்களை காண்கிறோம். இராமாயணம், மஹா பாரதம், ஈலியட் ஆடிசிஸ் ஆகியவைகள் நீதிகளையும், அனுபவங்களையும் தன்னிடத்தே கொண்டு, அவற்றை படிப்பவர்களுக்கு மிக்க நல்லபலன்கள் அளிக்கின்றன. இராமாயணம், பாரதம் ஆகியவற்றை ஒரு மனிதன் படித்தால், அவன் தன் சிறு வாழ் நாளிலேயே உலகத்தில் உள்ள எல்லாவிதமான நன்மை தீமைகளையும், சூதுவாதின் கெடுதல்களையும், நல்வழி நடப்பதில் உள்ள அநுகூலங்களையும், அறிந்து அனுபவம் ஏற்பட்டு, தன் வாழ்வை வளம்பெறச் செய்து கொள்கின்றான்.

மதத்தின் ஆரம்பம் நம்பிக்கை, பள்ளியில் சிறுவர்களுக்கு 'அ' இதுதான் என்று ஆசிரியர் கூறுகிறார், சிறுவர்கள் அதை நம்பி, படித்து வருகின்றனர். பிற்காலத்தில், மேல் வகுப்புகளுக்கு வந்தவுடன் இவ்வெழுத்துக்கள், எவ்விதமான அறிவையும் கொடுப்பதில்லை; இவ்வெழுத்துக்கள் கருத்துக்களை சுமந்து வரும் வாகனங்களாக இருக்கின்றன என்பதை உணருவார்கள், அதுபோல நம்பிக்கையில் ஆரம்பித்த மதமும் பிற்காலத்தில் மனிதனை உண்மையான கடவுளிடம் இட்டுச் செல்லும் வாகனங்களாக அமைகின்றன என்பதை உணரலாம்.

இந்து மதத்தில் நான்கு பெரும் நிலைகள், அல்லது வகுப்புக்கள் உள்ளன. அவை சரிகை, கிரிகை. யோகம், ஞானம் என்பன ஆகும்.

**கடவுள் இருக்கிறாரா?** இக்காலத்தில் நம்நாட்டில் கடவுள் உண்டா, இல்லையா என்று சந்தேகம் கொண்டு இருப்பவர் அநேகர் உண்டு. எந்த பகுத்தறிவு படைத்த மனிதனும் கடவுள் இல்லை என்று கூறமுடியாது. அப்படி அவன் கூறினால், அது அவன் பகுத்தறிவுக்கே விரோதமாக அமையும். உதாரணமாக, நாம் ஒரு காரைப் பார்க்கிறோம். அதைப் பார்த்தவுடன், அதைச் செய்த ஒருவன் உண்டு என்பதை ஊகிக்கிறோம். ஒரு மேஜை

யைப் பார்க்கிறோம். அந்த மேஜையை செய்த தச்சன் ஒருவன் உளன் என்பதை நம் அறிவு நமக்குப்புலப்படுத்துகிறது. இவற்றைச்செய்தவர்களை, நாம்நேரில் அறியா விட்டாலும் பிறர் மூலம் கேள்விப்படா விட்டாலும், இவைகளை செய்தவர்கள் இல்லாமல் இவைகள் ஏற்பட்டு இருக்கமாட்டா, என்பதை நம் பகுத்தறிவு நமக்கு சுட்டிக் காட்டுகிறது. அது போலவே இந்த உலகத்தையும், பிரபஞ்சத்தையும் படைத்த ஒருவன் இருக்க வேண்டும் என்பதை பகுத்தறிவு நமக்குச்சுட்டிக் காட்டுகிறது, அப்படி ஒருவனுடைய பகுத்தறிவு சுட்டிக் காட்டாவிட்டால், அவனுக்கு பகுத்தறிவு இல்லை என்பதே பொருள். ஒருவனுக்கு கணித வாய்ப்பாடு தெரியாததால், கணிதம் இல்லை என்று ஆகிவிடுமா? எனவே நம்மை படைத்த கடவுள் ஒருவன் உளன் என்பது தெளிவாகிறது.

சிலர் தாங்கள் பார்க்காததை அவர்கள் நம்புவது இல்லை என்று கூறுகின்றனர். இப்படிப்பட்டவர்களில் அநேகர் அமெரிக்காவையோ, ரஷியாவையோ, பார்த்து இருக்கமாட்டார்கள். எனவே, இவர்களுக்காக, அமெரிக்காவும், ரஷியாவும் இல்லாது போய் விடுமா? இவர்களில் சிலர் அவர்களுடைய தாத்தாக்களையும், முப்பாட்டனார்களையும், பார்த்திருக்கமாட்டார்கள், எனவே இவர்கள் பாட்டனாரை பார்க்காததால், அவர்கள் இருந்திருக்க முடியாது என்று வாதாடுவார்களா? அப்படி அவர்கள் வாதாடினால், பாட்டனார்கள் இல்லாததால், இவர்களும் இருக்க முடியாது என்றும், இவர்கள் இருப்பதும் பொய் என்றும் நாம் கூற முடியுமல்லவா?

இன்னும் சிலர் தங்கள் அறிவுக்குப் புலப்படாத விஷயங்களை தாங்கள் ஒப்புக் கொள்வதில்லை என்று பெருமையாகக் கூறிக் கொள்கின்றனர்.என்னபேதமை! இவர்களுடைய அறிவு புலப்பட்டுத்தான் உலகத்தில் உள்ள பொருள்கலெல்லாம் இருக்க வேண்டுமென்

ருல், உலகம் மிகமிகக்குறுகி சிறுத்து, மிக அற்பமான பொருளாகிவிடும்; இவர்களுக்காக உலகத்தின் பெரும் பகுதியை மூடிவிட வேண்டிவரும். அதுபோல, இவர் களுடைய சம்மதமும், அங்கீகாரமும் பெற்றுத்தான் உலகத்தில் உள்ள பொருள்கள் இருக்க வேண்டுமென் ருல், உலகம் சூனியமாகவே ஆகிவிடுமன்ரே!

ஆனல் உண்மை அப்படி அன்று; உலகத்தில் உள் ளவை இப்படிப்பட்டவர்களின் அங்கீகாரம் பெற்று இரு க்கவேண்டியது அவசியம் இல்லே. ''பூனே கண்ணே மூடி ஞல் உலகம் இருண்டு விடாது''. எனவே தர்க்க ரீதி யாக, இந்த பிரபஞ்சத்தைபடைத்து, நிர்வகித்து, காத்து வரும் கடவுள் ஒருவர் உண்டு என்பது வெள்ளிடைமலே என விளங்கும்.

'' ஆக்கி யளித்துத்துடைக்கும்--தொழில்
அத்தனே வைத்தும், எள்ளத்தனேயேனும்
தாக்கற நிற்கும் சமர்த்தன்--''

என்று தாயுமான சுவாமிகள் கூறியதைக் கவனிக்க வேண்டும்.

கடலில் எழும்பும் அலேகள் எவ்வளவு பெரியன வாக இருப்பினும், அவைகள் கடலிலேயே விழுவதைப் போல, மனிதன் கடவுளுக்கு எதிராக செய்யும் எந்தப் புரட்சியும் கடைசியில், கடவுளின் திருவடிகளிலேயே விழுந்து மாளும்.

## மனிதன் கடவுளே ஏன் வணங்க வேண்டும்?

நியாய நூல், மனிதனே ஒரு பகுத்தறிவு படைத்த மிருகம் என்று இலக்கணம் வகுத்துக் கூறியிருக்கிறது. பஞ்சபூத தேவைகளுக்குப் பின், மனிதன் அடைய விரும்புவது இன்பம். மனிதனுடைய வாழ்க்கையின் குறிக்கோள் இன்பம். மனிதன் இன்ப நுகர்ச்சியை விரும்பி, ஒரு ஆசைக்குப் பின், அடுத்து அடுத்து

ஆசைகள் கொண்டு, இன்பம் அடைய விழைகிறான். இன்பத்தை விரும்பாத மனிதர்களும் உலகத்தில் உண்டோ?

**எது இன்பம்?** ஆனால் மனிதனது இன்ப வேட்கை அவனை ஒரு பாலைவனத்திற்கே கொண்டு செல்கிறது. மனிதன் எதை அடைந்தால் இன்பம் கிடைக்கும் என்று எண்ணி உழைத்தானோ, அது கிடைத்தவுடன், அது இன்பமாகவே அவனுக்கு தெரிவதில்லை. பின்னர் மற்றொரு பொருள் இன்பம் கொடுப்பதுபோல் தோற்றம் அளிக்கிறது, பின், அதை நோக்கி மனிதன் நடக்கிறான். அதையும் அடைந்தவுடன், அதிலும் அவன் இன்பம் காண்பதில்லை. இப்படி அவன் முதலில் இன்பமாக கருதிய பொருள்களெல்லாம் கானல்நீர் தோற்றம் போலாகி, அவனை துன்பத்தில் ஆழ்த்துகின்றன. எந்த உலக இன்பமும் மனிதனுக்கு, இன்பத்தையும், மனநிம்மதியையும் கொடுப்பதில்லை என்பதை — மனிதனின் அறிவு வளர்ச்சிக்கு தக்கபடி சிறிது காலத்திலோ அல்லது நீண்ட காலம் கழித்தோ—உணருகிறான். இப்பொழுதுதான் மனிதனின் உண்மை அறிவு விழித்துக் கொள்ள ஆரம்பிக்கிறது. உண்மையான இன்பம் எங்குள்ளது என்பதைப்பற்றி ஆராய ஆரம்பிக்கிறான்.

அநேகர் இந்த உண்மையை தாங்களாக உணர வெகுகாலம் — அல்லது பல பிறவிகள் கூட — ஆகும் தானே உணர்வதைவிட, முன்பு வழி நடந்து, அனுபவத்தில் சொல்லும் பெரியோர்கள் வார்த்தையை நம்பி, அவர்கள் காட்டும் வழிப்படி நடந்தால், நாமும் துன்பத்தை நீக்கி, சீக்கிரம் நிலையான இன்பத்தை அடையலாம். இந்த அடிப்படை உண்மையையும், உலகத்து அழியும் இன்பத்தையும் கடவுளிடமுள்ள அழியா இன்பத்தையும், நாம் அறிந்து கொள்ள வேண்டும்.

உதாரணமாக இப்பொழுது ஒரு குழந்தை பிறக்கிறது என்று வைத்துக் கொள்வோம், அந்தக் குழந்தை

வளர்ந்து வெகுநாட்கள் வரை இருப்பதாக எண்ணு வோம்; அது அநேக உலக சுகங்களை அனுபவிப்ப தாகவும் வைத்துக் கொள்வோம். எப்படி இருந்தாலும் பின்னர் ஒரு காலத்தில், நாம் அறிந்தாலும் அறியா விட்டாலும் இக்குழந்தை இறக்கும் என்பது அடிப்படை உண்மையல்லவா? அது வெகுநாள் வாழ்ந்தாலும், பின் முடிவு என்பது ஒன்று உண்டு என்பதை யாரால் மறுக்க முடியும்? இதுபோல, உலக இன்பங்களெல்லாம் முற்றுப்பெருதவை—பொய்யானவை என்றும், முடிவில் ஆண்டவனிடம்தான் மெய்யான இன்பம் இருக்கிறது, என்பதையும் அறிவில் சிறந்த பெரியோர்கள் கூறு வதை. நாம் அறியா விட்டாலும், யாரே மறுக்க வல்லார்?

கடவுள் ஒருவனே முற்றுப் பெற்றவன். கடவுள் முற்றுப் பெற்றவன் என்பதை தர்க்கரீதியில் விளக்குவோம். நாம் கும்பிடும் கடவுளை முற்றுப் பெருதவன் என்று வைத்துக் கொண்டால், அப்படி குறையுள்ள முற்றுப்பெருத கடவுளைப் படைத்தவன் ஒருவன் இருக்க வேண்டுமென்று ஆகிறது. அப்படிப் பட்டவன் முழுமுதற் கடவுளே. எனவே ஒரு முற்றுப் பெற்ற, முழுமுதற் கடவுள் உண்டு என்று அமைகிறது. அவனிடம் குறைகள் கிடையாது. இதற்கு நேர் எதிராக மனிதன் முற்றுப் பெருதவன்; அவனிடம் குறைகள் உண்டு. அவன் விரும்பும் உலக ஆசைகள் அவனுக்கு நிறைவை கொடுக்கமாட்டா. ஒரு மனிதன் பணக்காரன் ஆக விரும்புகிருன். பின்னர் அதிஷ்ட வசத்தால். பணக்காரனுகி விடுகிருன் என்று வைத்துக் கொள்வோம். எனினும், அவன் மனநிம்மதி அடைவ தில்லை. அவனுக்கு புதிய ஆசைகள் பிறக்கின்றன. பின்னர், சந்தர்ப்பம் இருந்தால் அவைகளும் பூர்த்தி செய்யப் பெறுகின்றன. அப்படி இருந்தும் அவன் நிம்மதியும், சந்தோஷமும் அடைவதில்லை. கடலில் அலைகள் எழுவதுபோல, அவன் மனதில் ஒன்றன் பின் ஒன்ருக பல ஆசைகள் எழுந்து அவனை அலைக்கழித்து

அவன் நிம்மதியைக் கெடுத்து, அவனைத் துன்பத்தில் ஆழ்த்துகின்றன.

''ஆழித்துரும் பெனவே அங்கும் இங்கும் உன் அடிமை
பாழ்த்திரிவதென்ன பாவம் பாராபரமே'' —தாயுமானவர்

கடலில் அகப்பட்ட துரும்பு போல, மனிதன் உலக ஆசையில் அகப்பட்டுத் துன்பப்படுகிறான்.

நம்முடைய துன்பந்துடைத்து, நாம் இன்பம் அடைவது எங்ஙனம்? உலக வாழ்க்கையிலுள்ள துன்பங்கள் நம்மை அழுத்தாவண்ணமும், இறுதியாக பேரின்பம் கிடைக்கவும். கடவுளிடம் செலுத்தும் பக்தியே நமக்கு உதவும்.

''தனக்குவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றல் அரிது'' —திருக்குறள்

இன்பத்தை விரும்பும் நாம், இன்பம் இருக்கும் இடத்தை நாடிச் செல்ல வேண்டும். கடவுளிடமே இன்பங்கள் எல்லாம் இருப்பதால், அவனை நாட வேண்டும். குளிரில் வருந்துபவன் நெருப்பை நாடிச் செல்கிறான். சூரிய உஷ்ணத்தை நாம் அனுபவித்து, நன்மை அடைவது போல, கடவுளுடைய கருணையை பெற்று நன்மை அடைய வேண்டும்.

சிலர் உலக இன்பங்களை கடவுளிடம் கேட்கக் கூடாது என்று நினைத்துக் கொண்டு இருக்கிறார்கள். இது முற்றிலும் தவறுதலான கொள்கையே. இறைவனுடைய சாம்ராஜ்யத்தில் பேரின்பங்களே இருக்கும் பொழுது இச்சிறு இன்பங்கள் இல்லாமற் போய் விட்டனவா? பக்குவம் அடைந்த பெரியோர்கள் இச்சிறு இன்பங்களை விரும்ப மாட்டார்கள் என்பது உண்மை. ஆனால், இல்லற வாழ்விலுள்ளவர்களுக்கு இறைவன், நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்திற்கும் உறுதுணையாக இருந்து, நாம் விரும்பும் இன்பங்களை கொடுக்க இருக்கிறான்.

சரி, எங்கும் உள்ள பரம்பொருளை நாம் எவ்வாறு அணுகி, நம் குறைகளைக் கூறி, நமக்கு வேண்டியவற்றை அவனிடமிருந்து பெருவது? எங்கும் உள்ள இறைவனை நம் சிறிய மனத்தால் சிந்திப்பது இயலாத காரியம். இறைவன் எங்கும் இருந்தாலும், நம் சிற்றறிவு தாங்கும் நிலையிலும், நமது சூழ்நிலைக்கும், மனோபக்குவத்திற்கும் எடுத்த நிலையிலும் இறைவனை உருவகப்படுத்தி, நாம் வழிபட வேண்டும். அவ்விதம் செய்வதனால்தான், நம் அறிவு வளரவளர நாம் அடுத்த அடுத்த படிகளுக்கு முன்னேக்கிச் செல்லலாம். கடவுள் எங்கும் நிறைந்து இருந்தாலும், விக்கிரங்களில் வழிபடுவதன் கருத்தும் இதுவே. '' அண்டத்தில் உள்ளது பிண்டத்தில்'' என்று கூறுவர். கோவில்களில் விக்கிரகங்களை வெறும் கற்சிலைகளாக வைக்காமல், அவற்றிற்கு மந்திர உச்சாடனம் செய்து, இயந்திர தகடுகள் அமைத்து, மற்றும் பல உபாயங்கள் மூலம் அவைகளை சக்தி பெற்றவைகளாகச் செய்து, மக்களுக்கு நன்மை கிடைக்கும்படி பெரியோர்கள் அமைந்திருக்கிறார்கள். இப்படி ஏற்படுத்தப்பட்ட கோவில்களில், சக்தியும அருளும் இருப்பதைக் காணலாம்.

நாம் மதத்திற்கும் விக்கிரகங்களுக்கும் மரியாதை செலுத்த வேண்டும். ஏனென்றால், விக்கிரகங்கள் கடவுளின் பிரதிநிதிகளாய் அமைந்துள்ளன, சுவாமி விவேகானந்தர் ஒரு மந்திரியின் வீட்டில் இருக்கும் பொழுது அங்கு அரசர் சுவாமியைப் பார்த்து, விக்கிரகங்களை ஏன் மதிக்க வேண்டும். என்று கேட்க, அதற்கு சுவாமி, மறுமொழி கூறுமல் மந்திரியைப் பார்த்து அங்கு இருந்த அரசரின் படத்தில் எச்சல் துப்பும்படி கூறினர்கள். அதற்கு மந்திரி, 'ஆ' அது அரசருடைய படம் அல்லவா, அதற்கு அவமதிப்பு செய்தால், அது அரசருக்குச் செய்யும் அவமதிப்பல்லவா? என்று மறுமொழி கூறினர். உடனே ஸ்வாமிகளும் இது போலத்தான் விக்கிரகங்களுக்குச் செய்

யும் மரியாதையும், அவமரியாதையும், இறைவனுக்குச் செய்தது போல் ஆகும் என்றார்கள்.



**மதநம்பிக்கையால் ஏற்படும் நன்மைகள்:-** காற்றை எவ்வாறு நாம் சுவாசித்து வாழ்கிறோமோ, அவ்வாறு இறைவனுடைய அன்பினாலும், உதவியினாலும் நாம் உலகத்தில் வாழ்கிறோம். நமது தேவைகளையும், இன்பங்களையும் மத நம்பிக்கை கொடுக்கிறது.

''குலந்தரும் செல்வம் தந்திடும், அடியார்
படுதுயர் ஆயின எல்லாம் நிலந்தரம் செய்யும்
நீள் விசும்பருளும், அருளொடு பெருநிலம்
அளிக்கும் வளம் தரும் மற்றும் தந்திடும்
பெற்ற தாயினும் ஆயின செய்யும்
நலம் தரும் சொல்லை நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாமம்''

என்று திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

நாம் அன்புடன் இறைவனை வணங்கி, அவனிடம் வரங்கள் கேட்கும் பொழுது, அவன் பெற்ற தாயாக, —தந்தையாக—தமையனாக — ஆசிரியனாக — இருந்து நமக்கு வேண்டியவற்றை அருளுகின்றான்.

இந்த அருள் பாலிப்பு, மத நம்பிக்கையற்ற, நாஸ்தீகர்களுக்குக் கிடையாது.

மத நம்பிக்கை கொண்டு உள்ளவர்களின் மனது என்றுமே சித்ரவதை அனுபவிப்பதில்லை. ஏனென்றால் நாம் அனாதைகள் இல்லை; நம்மை காக்க ஒரு கடவுள் எப்பொழுதும் இருக்கின்றான், என்ற எண்ணமே அவர்களுக்கு ஒரு நிம்மதியையும், உலக வாழ்க்கையில் நல்ல பிடிப்பையும் கொடுக்கிறது. நாஸ்தீகர்களுடைய மனமோ, கடவுள் ஒருவன் இல்லை என்பதால், தங்களைத் தாங்களே காத்துக்கொள்வதாக நினைத்து, உலக துன்பங்கள் அவர்களை மிரட்டும் பொழுது, நிம்மதி இழந்து, சாந்தியோ, இன்பமோ கொடுக்க மேலே ஒருவன் இன்றி. நெருப்பில் பட்ட புழுவாக துடிக்கிறது. உலக வாழ்க்கை' நாஸ்தீகர்களுக்கு, ஒவ்வொரு நிமிடமும் நரக வாழ்க்கையாகவே அமைகின்றது.

இராமலிங்க அடிகளார், முருகனை (அதாவது கடவுளை) வணங்காதவர்களுடைய கதியைப் பற்றி திரு அருட்பாவில் விளக்கி கூறுகிறார்.

"எந்தை நிலை வணங்காத பெயர்வாய் கூழுக்கும்
ஏக்கற்றிறுக்கும் பேயர் வெறுவாய்
எங்கள் பெருமான் உனை வணங்காத மூடர் தலை
இகழ்விற கேடுக்குந் தலை
சந்தமிகு நின்மேனி காணாத கயவர்கள்
கலநீர் சொரிந்த அழுகண்
கடவுள் நின் புகழ்தனைக் கேளாத வீனர்செவி
கைத்திழவு கேட்குஞ் செவி
பந்தமற நினை எணாப் பாவிகள் தம் நெஞ்சம்
பகீரென நடுங்கும் நெஞ்சம்
பரம நின் றிருமுன்னர் குவியாத வஞ்சகர்கை
பலியேற்க நீள் கொடுங்கை
சந்தமிகு சென்னையிற் கந்த கோட்டத்துள்வளர்
தலமோங்கு கந்தவேளே
நன்முகத் துய்யமணி உன்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே!

என்று பாடியுள்ளார்.

இந்த உலகத்தையும், பிரபஞ்சதையும் படைத்து, இயக்கி வரும் ஒருவன் இருக்க, இவனுக்கு எதிராகவே அப்படி பட்டவன் இல்லை என்று கூறிக்கொண்டு, அவன் கொடுக்கும் காற்று, உணவு உடை ஆகிய வற்றை அனுபவித்து வரும் நாத்தீகன் வாழ்வு, ஒரு பெரிய நரக வாழ்வாக மாறி. அவன் மனச் சாட்சியே அவனை சித்ரவதை செய்து, பெரும் துன்பத்தை அவன் அனுபவிப்பதை உற்று நோக்கினுல் நாம் அறியலாம்.

சிலர் பக்தி செய்வதும், மதம், சாமி என்று சொல் வதெல்லாம் ஆண்டிப்பண்டாரங்கள் பேசும் பேச்சு என்று கூறுகின்றனர். பக்தி செய்தால், உலக வாழ்க் கையை துறந்து சாமியாராகி விட வேண்டியது வந்தா லும் வரும் என்று சிலர் நினைக்கின்றனர். உலகத்தில் பணம் சம்பாதிப்பதற்கும், புகழ் கீர்த்தி பெறுவதற்கும், ஆரோக்கியம் அடைவதற்கும், பெருவாழ்வு வாழ்வ தற்கும் பக்தியும், மத நம்பிக்கையும் மிகவும் அவசியம்.

மேலும், சிலர் தாங்கள் (முன்பு செய்த புண்ணியத்தின் பலனாக சில வரங்கள் பெற்று இருப்பதால்) மற்றவர்களை கேலி செய்கின்றனர். உங்களுக்கு நோய்தீர கடவுளிடமா வரம் கேட்க வேண்டும்? கடவுளை வழி பட்டா பிள்ளைகளைப் பெற வேண்டும்? நாங்கள் கடவுளைக் கும்பிடுவது கிடையாது; ஆயினும் எங்களுக்குப் பல குழந்தைகள் இருக்கின்றன என்று கூறுகிறார்கள். இந்த தர்க்க வாதப்படி பார்த்தால் விலங்குகள் கூட, கடவுளை வழிபடாமலேயே அநேக குட்டிகளைப் பெறுகின்றன; அப்படி இருக்கும்பொழுது பகுத்தறிவு படைத்த மனிதன் பிள்ளைகள் பெற்றதில் என்ன பெருமை இருக்கிறதென்பதை அவர்கள் அறிய வேண்டும். குறை உள்ளவர்கள் ஆண்டவனிடம் கேட்கிறார்கள். ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விதமான குறை இருக்கும்; அந்தக் குறிப்பிட்ட குறையில்லாத மனிதன், அந்தக்குறை இருக்கும் மனிதனைப் பார்த்துக் கேலி செய்வது பெரிய அறியாமையாகும்.

நம்மிடம் உள்ள குறைகளையெல்லாம் போக்க, நாம் கடவுளிடம் தான் முறையிட வேண்டும். யாரோ ஒரு மனிதனுக்கு ஒரு குறை இல்லை; அவன் வரம் கேட்கவில்லை என்பதற்காக, நாமும் நம் வரங்களை கேட்காமல் இருந்து விடக் கூடாது. நோய் வந்தால் நாம் வைத்தியரை நாடுகிறோம். நோய் இல்லாத மனிதன் வைத்தியரை நாடமாட்டான். ஆனால், அவனுக்கும் நோய் வந்தால் பின்னர் அவனும் வைத்தியனைநாடுவான் என்பதில் சந்தேகமில்லை.

அன்பர்களுக்கும் அடியவர்களுக்கும் சில சமயங்களில் துன்பமும் வறுமையும் வாட்டும்; சில சமயங்களில் நாஸ்திகர்களுக்கும், வன் நெஞ்சர்களுக்கும், சுக போகங்களும் பொருளும் நிறைய கிடைக்கும். இதைக் கண்டு, கடவுளின் செய்கைகளில் குறை காணத் தோன்றும், முன்புசெய்த புண்ணியத்தால், தற்பொழுது ஒரு மனிதன் நல்லஉடலைப் பெற்றிருக்கிறான். தற்பொழுது அவன் உடலை தீய வழிகளில் செலுத்திக்கொண்டு

வருகிறுன் என்றுலும் துன்பம் உடனே தாக்காமல் இருக்கலாம். ஆனுல் இப்பொழுது செய்வதன் பலனை பின்னர்தான் அடைவான். (முன் வினையால்) நோய் துன்பமடைந்த அன்பனும், இப்பொழுது மருந்து முதலியன உண்டு உடலை நல்ல நிலைக்கு கொண்டு வருகிறுன். இப்பொழுது துன்பமுற்றுலும் நல்வினைகள் செய்து பின்னர் இன்பத்தையும் சுகத்தையும் அடைவான் என்பது உறுதி. எனவே மனதிடத்துடன் ஆண்டவனிடம் பக்தி செலுத்தவேண்டும்.

முன்பு 'புண்ணியா' பேங்கில் சேமித்து வைத்தவர்கள் தற்பொழுது எடுத்து செலவழிக்கிறுர்கள்; நாம் முன்பு சேமித்து வைக்காவிட்டால் இப்பொழுதாவது, 'புண்ணியா' பேங்கில் சேமித்து வருவோம். இப்பொழுது செலவு செய்தவர்கள், சேமிப்புக் குறைந்தால் பின்னர் வருந்துவர்; நாம் இப்பொழுது சேமித்து, பின்பு இன்பம் அடைவோம்.

நாஸ்திகர்கள் 'இந்த விஞ்ஞான காலத்தில் மத நம்பிக்கை கொண்டிருப்பவர்கள் மூடர்கள்,' என்று கூறித் திரிகின்றனர். ஆனுல், இன்று சந்திர மண்டலத்திற்கு மனிதனை அனுப்பி வைத்த விஞ்ஞானிகள் கூட கடவுள் இல்லை என்று கூறவில்லை; மத நம்பிக்கை கொண்டு இருப்பது மூடத்தனம் என்று கூறவும் இல்லை. மாறுக வளிமண்டலத்தில் உள்ள அற்புதங்களைக் கண்டு, கடவுளின் இருக்கையை விஞ்ஞான ரீதியாக ஒப்புக்கொண்டு இருக்கிறுர்கள். மேலும் பல புதிர்களுக்கு, விஞ்ஞானிகள் மத நம்பிக்கையை சார்ந்தே விடை கண்டுபிடிக்க விரும்புகிறுர்கள். இந்த நாஸ்தீகர்கள் அந்த விஞ்ஞானிகளை விட, அறிவில் சிறந்தவர்களா? உண்மையான விஞ்ஞானி, நாஸ்தீகராக இருக்க முடியாது என்பது உலகம் கண்ட உண்மையே.

வேலையும் தூக்கமும் போன்று, விஞ்ஞானம் வேறு; மத நம்பிக்கை வேறு என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

சில நாஸ்தீகர்கள், தாங்கள் சீர்திருத்த வாதிகளென்றும், தாங்களும் மதத்தைச் சீர்திருத்த தகுதி பெற்றிருப்பதாகவும் இயம்புகின்றனர். இது ஒரு வேடிக்கையான கூற்று. சீன நாட்டுச் சேனாதிபதி, தானும் ஒரு சேனாதிபதிதானே; எனவே, இந்திய ராணுவத்தைத் திருத்தி அமைக்க தனக்கும் உரிமையுண்டு என்று கூறினால், யாராவது அவரது கூற்றை அங்கீகரிப்பார்களா? நாஸ்தீகர்கள் மதச் சீர்திருத்தம் செய்ய வேண்டும் என்று கூறுவதும் இதை ஒத்து இருக்கிறது.

மத நம்பிக்கை என்பது ஓர் தூய்மையான வெள்ளை ஆடை போன்றது. அதன் மீது முரட்டுத் தனமாக, அழுக்குக் காலுகளுடன் பிரவேசிக்கலாகாது. அப்படி செய்வது வீரமல்ல; விவேகமல்ல மதம் என்பது ஓர் புனிதமான அமைப்பு. அதன் குறிக்கோள் அறியாது அதை கண்மூடித்தனமாகாது. தாக்கிப்பேசுவதுஅறிவுக் குப் பொருத்தமன்று. Fools rush in where angels fear to tread. ஒரு பழமொழி, 'தேவதைகள் காலடி எடுத்து வைக்கத்தயங்கும் இடத்தில், மூடர்கள் தட தடவென்று பாய்வார்கள்' என்று கூறுகிறது.

மத நம்பிக்கை மனச்சாந்தியை அளிக்கிறது. 'சாந்தமுலேகா - சௌக்கியமுலேது' என்று கூறினார் தியாகராஜர். இப்படிப்பட்ட மனச் சாந்தி நாஸ்தீகர் களுக்குக் கிடையாது.

நாம் ஏழைகளாக இருந்தாலும், பணக்காரர்களாக இருந்தாலும், எப்படிப்பட்ட சூழ்நிலையில் இருந்தாலும், மத பக்தி ஒன்றே சந்தோஷத்தையும் மன நிம்மதியையும் தரும்.

அடுத்தாற்போல், ஆஸ்தீகர்களுக்கு நல்ல தூக்கம் கிடைக்கும். தூக்கமென்பது ஆண்டவன் எல்லா உயிர்களுக்கும், கொடுத்த ஒரு அருமையான வரப்பிர சாதமாகும். உடல் ஓய்ந்து தூங்குவது ஒன்று; உள்ள

மும் ஓய்ந்து தூங்குவது மற்ருென்று ஆகும். விலங்கி னங்கள் உடல் களைப்படைந்து தூங்குகின்றன. ஆனுல் மனிதனே மனதும் களைப்படைந்து நித்ராதேவியின் அணைப்பில் இன்பம் பெறுகிருன். ஆனுல் நாஸ்தீகனே, தன்னைக் காப்பாற்ற தானேதாஞக, முனைத்து நிற்பதால், அவனுக்கு நிம்மதியான தூக்கம் கிடைக்காது. அயர்ந்து தூங்கினுல், தன் உடமைகளுக்காவது, தனக் காவது ஆபத்து ஏற்பட்டுவிடுமோ என்று பயந்து நித்தி ரையை அவன் அனுபவிப்பதில்லை. ஆனுல் ஆஸ்தி கனே, தன்னையும், தன் உடமைகளையும் காப்பாற்ற, சகலவல்லமையுள்ள கடவுள் இருக்கிருர். - அவர் பார்த்துக் கொள்வார் என்ற எண்ணத்தில் நிம்மதியாக, ஆனந்தமாக - நித்திரை செய்கிருன். இப்படிப்பட்ட நித்திரை, நாஸ்தீகர்களுக்கு, எவ்வளவு பணம் கொடுத் தாலும் கிடைக்காது,

இந்த நாஸ்தீகர்களும், தங்களுக்குக் கஷ்டமும், துன்பமில்லாதவரை மிகத் தைரியமாக கடவுள் இல்லை யென்றும் மத நம்பிக்கை கொள்வது பைத்தியக் காரத் தனமென்றும் பிரசங்கம் செய்வார்கள். ஆனுல் அவர் களுக்கு, ஆபத்தோ, துன்பமோவந்தால், மறைமுகமாக ஆண்டவனுக்கு ஆயிரம் கூழைக்கும்பிடுகள் போடுவார் கள் (அவற்றை நாம் பார்க்காவிட்டாலும் ஆண்டவன் நிச்சயம் பார்த்துக் கொண்டு இருப்பான்) When the devil is sick it becomes a saint' 'சாத்தானுக்கு நோய் வந்தால், அது ஒரு ஞானி போல் ஆகிவிடும்' என்பது பழமொழி.

மேலும் சிலர், கடவுளிடம் சிறிது நம்பிக்கை வைத் தும், சிறிது நம்பிக்கை இல்லாமலும், பச்சோந்தி போல் இருக்கிருர்கள். நாஸ்திகர்கள் பேச்சைக் கேட்ட வுடன் நாஸ்தீகம் பிறக்கும்; பின் தெய்வ காரியங்களைக் கண்டவுடன், ஆஸ்திகம் பிறக்கும். இப்படிப்பட்ட சந் தேகப் பேர்வழிகளுக்கும், ஆபத்தில்லாதவரை கடவுள் இல்லை; தலைவலி, காய்ச்சல் என்று வந்து விட்டால்,

அவர்கள் எல்லாக் கடவுள்களையும் கூப்பாடு போட்டு அழைப்பார்கள்.

வேறு சிலர் கடவுள் இருக்கிறானோ இல்லையோ - எப்படி இருந்தாலும் சரி; நமது பிரார்த்தனையை ஒரு வழியாக முடித்து விடுவோம் என்று கடமையைக் கழித்து விடுகின்றனர். இப்படிப்பட்ட ஒருவன் கடவுளிடம் சந்தேகத்துடன் - 'O, God, if there is a God, Save my soul! If there is a soul - ஓ! கடவுளே! (அப்படி கடவுள் என்று ஒருவன் இருந்தால்) என் உயிரை காப்பாற்று! (அப்படி உயிர் என்று ஒன்று இருந்தால்)' என்று பிரார்த்தனை செய்தானாம்.

நாம் இப்படிப்பட்ட நாஸ்தீகர்களுடன்நட்புக்கொள்வதால், நமது உலக வாழ்க்கையும், பர வாழ்க்கையும் பாதிக்கப்படும். நாஸ்திகர்கள், எவ்வளவு நண்பர்களாக இருந்தாலும், அவர்கள் உறவு ஆண்டவனுக்கு எதிராக அமையுமாதலால், அவர்கள் நட்பை உதறித் தள்ளுக!

"கண்ணுவாரேனும் உனைக் கைகுவியார் ஆயின் அந்த
மண்ணுவார் நட்பை மதியேன்—பராபரமே"

என்று தாயுமானவர் கூறினார்!

நாம் நல்ல பக்தர்களுடன் தொடர்பு கொள்ள வேண்டும். 'நல்லாரைக் காண்பதுவும் நன்றே' - அவர்களைக் காண்பதே நல்லது என்றால் அவர்களுடன் நட்புக் கொள்வது மிக மிக நல்லது.

ஸத் ஸங்கத்வே நிஸ் ஸங்கத்வம்
நிஸ் சங்கத்வே நிர் மோஹத்வம்
நிர் மோஹத்வே நிஸ் சலசித்தம்
நிஸ்சலசித்தே ஜீவன் முக்தி"; (பஜகோவிந்தம்)

நல்லார் நேசம் நமது மோகத்தை அழிக்கும்; மோகம் அழிய, பாசம் அழியும்; பாசம் அழிய சித்த சலனம் அழியும்; சித்த சலனம் அழிய ஜீவன் முக்தி

கிடைக்கும் என்று ஆதி சங்கரர் பஜ கோவிந்தத்தில் கூறுகிறார்.

இதுவரை, மத நம்பிக்கையின் அவசியத்தைப்பற்றி அறிந்து கொண்டோம். இனி, மத நம்பிக்கை எப்படிக் கொள்ள வேண்டும், எந்த அளவுக்குக் கொள்ள வேண்டும் என்பதை ஆராய்வோம்.

**எப்படி, எந்த அளவுக்கு மத நம்பிக்கை வேண்டும்.**

வாழ்க்கையை நம்பிக்கையுடன் ஆரம்பிக்க வேண்டும். எல்லா உலக நடவடிக்கைகளுக்கும் காரணம் நம்பிக்கையே. வியாபாரம் செய்வோரும், உத்தியோகம் பார்ப்பவரும், விவசாயம் செய்வோரும். ஏனையோரும் தாங்கள் செய்யும் வேலையின் பயனை, நாம் அனுபவிப் போமென்ற நம்பிக்கையில்தான் செய்து வருகின்றனர், சந்தேகத்தை வளர்த்துக்கொண்டு, சந்தேகப் பிராணி களாக வாழலாகாது. உறுதியுடனும், நம்பிக்கையுட னும், உழைத்தால் நாம் விரும்பியவற்றை அடையலாம். நமக்கு வெற்றி கிடைக்கும் வாய்ப்பைக்கூட, சந்தேகத் தினால், இழந்துவிட நேரும்.

உதாரணமாக ஒரு மனிதன் சிவபெருமானைக் குறித்துத்தவம் செய்தான். சிவபெருமானும், அவனுக்கு தரிசனம் கொடுத்தார். ஆனால் அந்த மனிதன், சிவ பெருமான் நமக்கு இவ்வளவு சீக்கிரம் தரிசனம் தந்து விடுவாரா; இது யாரோ ஒரு எத்தன்தான் வந்திருக் கிறான் என்று நினைத்து, சந்தேகித்து அவரைப் பார்த்து நீங்கள் சிவபெருமான் தானா? அப்படியானால் பார்வதி யுடன் அல்லவா வரவேண்டும்? நீங்கள் பார்வதியுடன் வந்தால்தான் நம்புவேன்' என்றான். சிவபெருமனும் மறைந்து, சிறிது நேரத்தில் பார்வதியுடன் பிரசன்ன மானார். இந்த பக்தனுக்கு மேலும் சந்தேகம் வலுத்தது. இவன் எங்கிருந்தோ ஒரு பெண்ணையும் அழைத்து வந் திருக்கிறான் என்று நினைத்து, 'நீங்கள் சிவபெருமான்

என்றால், தங்களது ரிஷப வாகனம் எங்கே?' என்று கேட்டான். அதற்கு சிவபெருமானும் நான் இத்துடன் இருமுறை உனக்காக தரிசனம் தந்தேன். இனி மூன்றும் முறையாக வருவேன்; அப்பொழுதும் உனக்கு நம்பிக்கையில்லாவிட்டால், நீ என்னைக் காண முடியாது' எனக் கூறி, சிறிது நேரத்தில் பார்வதியுடன் ரிஷப வாகனத்தில் எழுந்தருளினார். இதைப் பார்த்த பக்தன், இது ஏதோ மாயமாகயிருக்கிறது; சிவபெருமானாக இருந்தால். இப்படி நாம் சொல்வதை யெல்லாம் கேட்டு அதன்படி நடப்பாரா? இவன் எவனோ என்னை ஏமாற்ற வந்த எத்தன் என்று நினைத்து, தாங்கள் என் சொல் கேட்டு ஒவ்வொரு முறையும் வந்த படியால், நான் தங்களைச் சந்தேகிக்கிறேன். தாங்கள் சிவபெருமானே அல்ல. நீங்கள் போகலாம்' என்று கூறிவிட்டான். சிவபெருமானும் மறைந்தார். இவ்விதமாக சிரமப்பட்டு தவமிருந்து பெற்ற தெய்வ தரிசனத்தையும், அதன் பலனையும் சந்தேகத்தால் இழந்து விட்டான் அந்த பக்தன். எனவே, அனாவசியமான, ஆராய்ச்சியும் சந்தேகங்களும் கொள்ளுதல் கூடாது. மனிதனது அறிவும், பண்பும், மனோநிலையும் மனிதனுக்கு மனிதன் மாறுபடும் என்பதை நாம் முன்பே பார்த்தோம். மாணவர்கள் ஒரே பள்ளியில் படித்தாலும், பல வகுப்புகளில் படிக்கின்றனர். ஒரு பள்ளியில் முதல் வகுப்பு முதல் பத்து வகுப்பு ஈராக பல வகுப்புக்கள் இருக்கின்றன. முதல் வகுப்புப் படித்து முடித்த மாணவனுக்கு, இரண்டாம் வகுப்புப் புத்தகம் வேண்டும். மேல் வகுப்புகளுக்குச் செல்லும் மாணவர்களுக்கு கீழ் வகுப்புப் புத்தகங்கள் தேவைப்படுவதில்லை. பத்தாம் வகுப்புப் படிக்கும் மாணவனுக்கு முதல் வகுப்புப் புத்தகம் அவசியமில்லை. ஆனால், இவனுக்கு தேவையில்லை என்பதற்காக, முதல் வகுப்புப் புத்தகமே அச்சடிக்க வேண்டாம்; அந்த பள்ளியிலுள்ள, முதல் வகுப்பையே எடுத்துவிட வேண்டுமென்று கூறுவானா? அப்படிக் கூறினால், இப்படிப்பட்ட மாணவன் எவ்வளவு சுயநலம் உள்ளவனாக இருப்பான்?

இவ்வாறு? இறைவனை அடையும் பாதையில் பல வகுப்புக்கள் இருக்கின்றன. மத நம்பிக்கை என்பது முதல்படியாக அமைந்துள்ளது. மத நம்பிக்கை கொண்டு அநேக நன்மைகளை அடைந்து, இறைவனை நெருங்கிவரும் மனிதன், இனிமேல் உலகில் மத நம்பிக்கை இருக்கக்கூடாது என்று கூறுவானா? அவ் விதம் கூறினால், ஆரம்ப நிலையிலுள்ள மனிதர்களுக்கு துரோகம் செய்தவனாகமாட்டானா? யாரோ ஒருவருக்கு மத நம்பிக்கை தேவையில்லாமல் இருக்கலாம். அதற் காக மதமே இருக்கக்கூடாது என்று கூறுவது அறியா யாகும். ஒருவன் பி.ஏ. படித்து முடித்து விட்டதால், அவனுக்குப் பிறகு, கல்லூரியை மூடியாவிடுவார்கள்?

நம்மால் நேரடியாக அறிய முடியாதவற்றை அறிவதற்கும், கிடைக்காதவற்றை, கிடைக்கச் செய்வ தற்கும், மத நம்பிக்கை உதவியாக இருக்கிறது. கணக்கு ஆசிரியர் கணக்கில் விடை கண்டு பிடிப்ப தற்காக, தெரியாத - ஆனால் தெரிய வேண்டிய - ஒரு விடையை X எக்ஸ்' என்று வைத்துக் கொள்வோம் என்று கூறுவார். 4X ஆனது இவ்வளவு என்றால், ஒரு X என்பது எவ்வளவு என்று விடை கண்டுகொள்ள வழி சொல்லிக் கொடுப்பார். இம்மாதிரியே, நமக்கு தெரியாத வேதாந்த விஷயங்களையும், சிருஷ்டியின் ரகசியங்களையும், மற்றும் உலகத்திற்கு உதவக்கூடிய காரியங்களையும் - மத நம்பிக்கையால்—மதத்தின் மூலம் விடை கண்டுகொள்ளலாம்.

கடைசியாக, மதத்தைப்பற்றி மற்றும் ஒரு அபிப்பி ராயம் உள்ளதை ஈண்டு விளக்குவோம். மதத்தில் — குறிபபாக இந்து மதத்தில் — அநேக முரண்பாடுகள் இருப்பதாக, சாதாரண நோக்குடன் பார்ப்பவர்களுக்கு தெரியும், ஓர் இடத்தில். கல்லில் தெய்வத்தைக் காண்பதைப் பற்றிக் கூறும், வேறு ஒரு இடத்தில், ,நட்டகல்லைச் தெய்வமென்று' நாலு புஷ்பம் சாத்தியே, சுற்றிவந்து முணுமுணுவென்று சொல்லும் மந்திரம், ஏதடா?' என்று வினவும்.

இவைகள் முரண்பாடுகள்போலத் தோன்றினாலும், உண்மையில் முரண்பாடுகள் அல்ல. ஓர் உதாரணத்தின்மூலம் இதன் உண்மையை அறியலாம். ஓர் பள்ளியில் முதல் வகுப்புப் பையனை, ஆசிரியர் உரக்க, சப்தம் போட்டு, எழுத்துக்களையும், வார்த்தைகளையும், நெட்டுருப் பண்ணச் செய்வார். அப்பையன் மேல் வகுப்புகளுக்கு செல்லச்செல்ல, வெளிப்படையான ஆரவாரங்களுடன் படிக்கும் கல்வி மாறி, மனம் பதிந்து, லயித்து படிககும் கல்வி ஏற்படும். மேல் வகுப்புக்களில் சப்தம் இல்லாமல், மனத்தால் மட்டும் படித்து அதிக பலன் பெறுவார்கள். மதத்திலும் ஆரம்ப நிலைகளில் ஆரவார வழிபாடும், மேலே செல்லச்செல்ல மனம் ஒன்றி வழிபடுதலும் அமைந்து இருக்கிறது.

மற்றும் ஓர் உதாரணம். கடிகாரத்தின் உட்புறத்தைத் திறந்து பார்த்தோமானால், அங்கு பல சக்கரங்கள் பலப்பல வேகத்தில் எதிர்பக்கத்திலும், பக்கவாட்டிலும், மிக வேடிக்கையான விதத்தில் வேலை செய்வதை நாம் பார்க்கிறோம். இவற்றின் ஓட்டம் வெவ்வேறாக இருக்கின்றனவென்றாலும் அவற்றின் குறிக்கோள் ஒன்றே — அதாவது மணி காட்டுவதே! இம்மாதிரியே, மதத்தில் சம்பிரதாயங்களும் அனுஷ்டானங்கலும், முரண்பாடாக தெரிந்தாலும்: அவையாவும், மிகவும் அருமையான இயந்திரத்தில் அமைக்கப்பட்டிருப்பதுபோல், அமைக்கப்பட்டு, நமக்கு கடவுளின் அருளையும், அன்பையும்பெற உதவியாக இருக்கின்றன.

சிற்றின்ப சுகம் அனுபவிக்குமுன் பிருந்தே, அதற்குரிய காரண கருவிகளை பேணி வருவதுபோல, பேரின்பம் அடைவதற்கு கருவியாக உள்ள மத நம்பிக்கையை பேணி காப்பாற்றி வரவேண்டும். பேரின்பம் அடைய உதவும் வழிகளை நாம் அலட்சியப் படுத்தி விட்டால் பேரின்பம அடைவது வெகுதூரம் தள்ளி ஏன் யுகக் கணக்காககூட போகும் என்பதை கவனத்தில் கொள்ள வேண்டும்.

மதசம்பந்தமான பக்குவத்தில், யார்யார் எந்தெந்த நிலைகளில் உள்ளார்கள் என்பதை, சம்பந்தப்பட்டவர்களும், அந்தந்த மத குருமார்களும்தான் முடிவு செய்ய முடியும். அப்படி முடிவு செய்தபின்னர் அவரவர் நிலைக்கேற்ப, பரமார்த்த ஆராய்ச்சியும், கல்வியும், உபதேசங்களும் கிடைக்கும். எனவே, நிலையறித்து, பக்குவமறிந்து மதபக்தி கொள்ள வேண்டும்.

கண்மூடித்தனமாக மதத்தை நம்புவதால், அநேக தீமைகள் விளைகின்றன. மக்களை ஏமாற்றிப் பிழைக்கும் அரைகுறை மதப் படிப்பாளிகளும், குருமார்களும், மதத்தில் அநேகர் இருக்கின்றனர். மக்களின் மத நம்பிக்கையை ஒரு மூலதனமாகக் கொண்டு, அநேகர், மத வியாபாரம் செய்து, கடவுளையும், ஞானத்தையும், காசுக்கு விற்கின்றனர். காசு கொடுத்து, கடவுளையாவது, அறிவையாவது, பூசாரிகளிடமிருந்து வாங்க முடியாது. மதச்சட்ட திட்டகங்கள் ஒரு புறமிருக்க, பூசாரிகள், தங்கள் சுயநலம் கருதி அவற்றை மாற்றியும், திரித்தும கூறி, மக்களை ஏமாற்றி வருகின்றனர். இவற்றையெல்லாம் மக்கள் நன்கு உணர்ந்து, சிறிதளவாவது மதசம்பந்தப்பட்ட அறிவுபெற்று, பொறுப்புள்ள மதப் பெரியார்களை அண்டி மதத்தின் அடிப்படை உண்மைகளை அறிந்து கொள்ள வேண்டும்.

சிலர் மத நம்பிக்கை அளவுக்குமீறி, தாங்கள் செய்ய வேண்டிய கடமைகளையும், பெறும் உரிமைகளையும், மறந்து, எல்லாம் சாமி பார்த்துக்கொள்ளும் என்று இருந்து விடுகின்றனர். பகுத்தறிவை உபயோகிக்க முடிந்தபொழுது, உபயோகிக்க வேண்டும். நம் வரம்புக்கு மீறிய இடங்களில், பெரியோர்களுடைய உதவியையும் கடவுளுடைய உதவியையும், நாடவேண்டும். ஒரு பக்தனுக்கு எதிராக, மதம் பிடித்த யானை ஒன்று வந்தது. இந்த பக்தனின் மனச் சாட்சியும், அறிவும், யானை வருவதற்குமுன் ஒதுங்கி, தப்பிச்செல்ல புத்திமதி கூறின. ஆனல், அந்த மூட பக்தனே, நாம் ஏன் பயப்படவேண்டும்; கடவுள்தான் பக்தரை காப்பாற்று

பவர் ஆயிற்றே என்று கருதி, ஒதுங்காமல், யானைக்கு முன் சென்றான். யானை பக்தனைக் கொன்று விட்டது. பின்னர், பக்தன் கடவுளிடம் ஏன் நீங்கள் என்னைக் காப்பாற்ற முன்வரவில்லை என்று கேட்டான். அதற்குக் கடவுள், ''பக்தனே! நான் உன்னிடம் உன் மனச்சாட்சி மூலமாயும், அறிவு மூலமாயும் உனக்கு தப்பும் வழியை தெரிவித்தேன். ஆனால் நீயோ, அவற்றைப் பொருட் படுத்தவில்லை'' என்று கூறிவிட்டார்.

தப்பான மத நம்பிக்கையும், அதிகமான மத நம்பிக் கையும் கேடு விளைவிக்கும் என்பதை அறிந்தோம். கடவுளிடம் எதைக் கேட்கலாம்; எதைக் கேட்கக் கூடாது என்பதைத் தெரிந்தும், அறிந்தும் கேட்க வேண்டும்.

கடைசியாக, நாம் மத நம்பிக்கையால் ஏற்படும் நன்மைகளை சில எடுத்துக் காட்டுகள் மூலமாக பார்ப் போம்.

மத நம்பிக்கை, விரும்புவதை கொடுக்கிறது. நமது ஆற்றாமையை ஆண்டவனிடம் கூறினால், அவனது உதவியை நிச்சயமாக பெறலாம்.

''துப்புடையாரை அடைவது எல்லாம்
சோர்விடத்துத் துணையாவர் என்றே
ஒப்பிலேன் ஆகிலும் நின்னிடைந்தேன்
யானைக்கும் அருள் செய்தமையால்
எய்ப்பு என்னை வந்து நலியும் போதங்கே
ஏதும் நான் உன்னை நினைக்க மாட்டேன்
அப்போதைக் கிப்போதே சொல்லி வைத்தேன்
அரங்கத்து அரவணைப் பள்ளியானே''

என்று பெரியாழ்வார் மிக்க உரிமையுடன் கூறினார்.

விநாயகப் பெருமானின் கோவில் பூஜை செய்பவர் ஒருநாள் வேறு காரியமாக செல்லவேண்டியதிருந்த தால், தனது குமாரர் நம்பியை அன்று பூஜைக்கு அனுப்பினார். நம்பி கணேசரிடம் அளவு கடந்த பக்தி யுள்ளவர். தன் தந்தையார் கொண்டு செல்லும் பிரசா

தத்தை விஞயகர் சாப்பிடுவதாக எண்ணி இருந்தார். எனவே பூஜைகள்முடிந்ததும் பிரசாதத்தைஉண்ணும்படி பிள்ளையாரை வேண்டினர். கல்பிள்ளையார் சும்மா இருப் பதைக்கண்டு, தன் பூஜையில் பிழை ஏதும் இருக்கலாம், என்று நினைத்து, தன் தலையை விஞயகரது வயிற்றில் முட்டி உடைத்துக் கொள்ள முற்பட்டார். அது கண்டு விநாயகர். உடனே பிரசன்னமாகி, நம்பியைத் தடுத்து, அவர் கொண்டுவந்த பிரசாதத்தை உண்டார். அது முதல் நம்பி கொண்டுவரும் பிரசாதத்தைச் சாப்பிட்டு, அவருடன் அளவளாவி, அநேக வரங்களையும் இந்த நம்பியாண்டார் நம்பிக்கு கொடுத்தார். நம்பி, விநாகப் பெருமானிடம் கேட்டு, மறைந்திருந்த அநேக நூல்களை வெளிக் கொணர்ந்தார். நம்பி நம்பிக்கையினுலேயே தும்பிக்கையான் அருள் பெற்ருர்.

அருணகிரி நாதரது நோயும் மிடியும் முருகன் அருளால் நீங்கின. மக்களை நோய், துன்பம், விரோதி களிடமிருந்து காக்க, அருணகிரிநாதர், முருகன் அருளால், பல பாடல்கள் பாடினர்.

மதுரையில் சொக்கநாதர் கிருபையால், தமிழ் தழைத்தது; தமிழ்ச்சங்கம் பிறந்து, வளர்ந்தது. அநேக நியாயங்களும் மக்களுக்கு வெளிப்பட்டன. குலோத் துங்கபாண்டியனுக்கு, அவன் வேண்டியபடி, பிராமணப் பெண் இறந்த விதத்தை விளக்கி. பழி அஞ்சிய அரச னுக்கு, சிவபெருமான் உண்மையின் ரகசியத்தைக் காட்டினர்.

சுந்தரமூர்த்தி நாயனர் இறைவனை தோழனுக கொண்டு உரிமை பாராட்டினர். பொன்னை மணி முத்தாறு நதியில் இட்டு, பின் திருவாரூரிலுள்ள குளத்தில் தேடி எடுத்தார்.

கி. பி. 1812-இல் மதுரை மீனுக்ஷி, ஆங்கிலேய கலெக்டர் பீட்டர், என்பாருக்கு அருளினள். கலெக் டர் பீட்டர், தாம் ஆபீசிற்கு குதிரையில் செல்லும் பொழுது, கோவிலுக்கு வலம் வருவதாக இருக்கட்டும்

என்று நினைத்து போகும்பொழுது, கோவிலுக்குவலமாக வந்து, திரும்பி வரும்பொழுது இடப் பக்கமாக வந்து அம்மனை சுற்றியே வருவது அவருடைய வழக்கமாக இருந்தது. ஒருநாள் கனமழை பெய்தது. ரோஸ் பீட்டர் தம் மாளிகையில் படுத்திருந்தார். அப்பொழுது ஓர் சிறிய பெண் குழந்தை தோன்றி பீட்டரை வீட்டை விட்டு வெளியில் வரும்படி கூறிற்று. மந்திரத்தால், கட்டுண்டவர் போல், அவரும் வெளியில் வந்தார். வந்ததுதான் தாமதம், அவர் எங்கு சயனித்திருந்தாரோ அதே இடத்தில் ஓர் பெரிய இடி விழுந்தது. பெண்ணுக வந்த உருவம் பச்சை வடிவில் மறைந்தது. வந்தது மீனுக்ஷியம்மையே என்று உணர்ந்த பீட்டர், "தாயே! மீனுக்ஷி! உன் கருணைதான் என்னே! நான் காலால் நடவாமல் குதிரையிலிருந்தே உன் கோவிலை வலம் வந்ததற்கே இத்தனை கருணையா," என்று பக்தி பரவசமானுர். மீனுக்ஷியின் குதிரை வாகனக்திற்கு தமது விலையுயர்ந்த கற்களையும் பொன்னையும் கொண்டு செய்த கால் மிதிகளை காணிக்கையாக செலுத்தினுர். அவரே, "பீட்டர் பாண்டியன்" என்று பெயர் பெற்று விளங்கினுர்.

ஸ்ரீமந் நாராயணனுடைய அன்பும் அருளும் சொல்லும் தரமன்று. கடவுள் மனிதனுகப் பிறந்து, மனிதன் படும்பாடெல்லாம் பட்டு, மனித சூழ்நிலையில் எப்படி நடக்க வேண்டும் என்பதை எடுத்துக்காட்ட இராம அவதாரம் எடுத்தார். இராமன் மனிதர்களில் சிறந்த வனுக விளங்குகிருன். நம்முடைய துன்பங்களும் குறைகளும் தீர, இராம கதை ஒன்றை படித்தாலே போதும். நாராயணனிடமும் ஸ்ரீமஹாலெக்ஷ்மியிடமும் எல்லா வரங்களையும் கேட்டுப் பெறலாம். நம்பினுர் கெட்டதில்லை.

திருமழிசையாழ்வார் மிகப் பெரிய வைணவப் பெரியார். இவர் அரசரை மதியாது கடவுளையே மதித்துக் கவிபாடுவார். அக்கால பல்லவராஜன்

தாம் யோகம் பயில வேண்டி, ஆழ்வாரைத் தம்மிடம் வந்து கற்றுக் கொடுக்கும்படி அவருடைய சிஷ்யராகிய கணிகண்ணனிடம் கூறினர். தனது குருநாதர் அரசன் முன் வரமாட்டார் என்று உரைத்தார் சிஷ்யன். அரசனுடைய கோபம், சித்துக்களில் வல்லவரான திருமழிசையாழ்வரை ஒன்றும் செய்யமுடியவில்லை. எனவே அரசனும், கணிகண்ணனை தன்மீது ஒரு பாட்டுப் பாடும்படி கூறினன். கணிகண்ணன் மறுத்தான். எனவே அரசனுக்கு கோபம் மூண்டது.

அரசன் கணிகண்ணனை தம் நாட்டைவிட்டு வெளியேறும்படி உத்தரவிட்டான். நடந்தவற்றை சிஷ்யன் குருவிடம் உரைத்தான். ஆழ்வாரும் அவ்வூர் விஷ்ணு ஆலயத்திற்குச் சென்று, பெருமானை நோக்கி.''

கணிகண்ணன் போகின்றன், காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டாம் - துணிவுடைய
செந்நாப் புலவனும் போகின்றேன், நீயும் உன்றன்
பைநாகப் பாயை சுருட்டிக் கொள்.''

என்று பாடினர். திருமாலும், தன் அடியார்களுடன் சேர்ந்து நாட்டை விட்டுப் போய் விட்டார். உடனே நாடு அருள் இழந்து, பஞ்சம் ஏற்பட்டது. அரசன் செருக்கொழிந்து, சிஷ்யனிடமும், குருவினிடமும், மன்னிப்புக் கேட்டு, அவர்களை தம் நாட்டிற்கு வரும்படி வணங்கி அழைத்தான்.

குருநாதரும், அன்புடன் தன் சிஷ்யனை அழைத்துக் கொண்டு, கோவிலுக்குச் சென்று,

'கணிகண்ணன் போக்கொழிந்தான், காமருபூங்கச்சி
மணிவண்ணா நீ கிடக்க வேண்டும்-துணிவுடைய
செநாப்புலவனு போக்கொழிந்தேன், நீயுமுன்றன்
பைநாகப் பாய் படுத்துக்கொள்''

என்று பாடினர். திருமாலும் மீண்டும் கோவிலில் எழுந்தருளினர். நாடு முன்போல செழித்தது. இதிலிருந்துஆண்டவன்அடியார்கள் அன்பிற்குக்கட்டுண்டு நடப்பவன் என்பது நன்கு விளங்குகிறது.

திருமூலரும்,

"அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவதை யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவதை யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே!"

என்று கூறினர்.

எங்கும் உள்ள இறைவன் அடியவர்களுடைய அன்புக்கும், பக்திக்கும் கட்டுப்பட்டு அவர்கள் கூறுவதையெல்லாம் கேட்டு, கட்டுண்டு நடப்பவன். சிலர் அவனை ஐங்கரத்தனுக வழிபடுவர்; வேறு சிலர் ஆறுமுகத்தனுகவும், சிலர், லிங்கரூபமாகவும், சக்தி தேவியாகவும், நாராயணனுகவும் வழிபடுவர். கிருஸ்தவமதத்தவர்கள் இறைவனை, சிலுவையின் சின்னத்தால் வழிபடுகிருர்கள். இஸ்லாமிய மதத்தவர்கள் மூன்ரும் பிறையால் வழிபடுகிருர்கள். இறைவன் யார் எப்படி அழைத்தாலும் -அன்புடன் அழைத்தால்–அவர்களுக்கு தரிசனம் கொடுக்கிருன், பரம்பொருளான இறைவன் அடியவர்கள் அன்புக்காக, தன் விஸ்வரூபத்தையும். குறுக்கி, ஒடுக்கி நின்று நமக்கு காட்சிகொடுக்கிருன்,

"பாட்டுக்கோ அன்பினுக்கோ பக்திக்கோ அன்பர் தங்கள்
நீட்டுக்கெல்லாம் குறுகி நின்றய்-பராபரமே"

என்ருர் தாயுமானவர்.

கிருஸ்தவ மதத்தில் ஏசுநாதர், இறைவனிடம் அன்புடன் கேட்டால், நமக்கு வேண்டியதைக் கொடுப்பான் என்று கூறியுள்ளார். 'தட்டுக-திறக்கும்; தேடுக -கிடைக்கும்; கேட்க-கொடுக்கப்படும்! என்று கூறியுள்ளார். நாம் வாழ, ஏசுநாதர் தன்னுயிரை கொடுத்தார். அவரைப் பின்பற்றி கிருஸ்தவ மதத்தில், அநேக மகான்களும், தியாகிகளும் தோன்றி, நம்மை வாழவைத்திருக்கின்றனர்.

ஏசுகிருஸ்துவின் உண்மை அடியார், ஆப்ரோ என்ற கிரிஸ்டபர், தன் உடல் வலுவினல், பெரிய வீரராக திகழ்ந்து, சாத்தானிடமே நேரில் சென்று, நீ

தான் அஞ்சாத வீரனு? என்று கேட்டார். சாத்தானும் நாம் அஞ்சாத வீரன் என்று பதில் கூறினுன். ஆனுல் ஒருநாள் இருவரும் வெளியே செல்லும் பொழுது ஒரு மரச் சிலுவையைக் கண்டு, சாத்தான் அஞ்சி, ஓடி ஒதுங்கினுன். இதைக் கண்ட ஆப்ரோ, தாங்கள் ஓர் மரச் சிலுவையைக் கண்டு அஞ்சுவதேன்? எனக் கேட்க, அதற்குச் சாத்தான் அச்சிலுவையில் உலக மக்களுக்காக உயிர்நீத்த உத்தமனைக் கண்டு அஞ்சுகிறேன். என்று பதிலுரைத்தான். உடனே ஆப்ரோ அப்படிப்பட்ட உத்தம மகானை தான் காண விரும்பி, ஒரு பெரியாரிடம் உபதேசம் பெற்று, அவர் வாக்குப்படி, எளியவர்களுக்கு உதவி செய்து வந்தான். ஒரு பெரிய ஆற்றங்கரையில் குடிசையமைத்து, ஏழைகளும் அடியவர்களும் ஆற்றைக் கடந்து செல்ல, தன் தோள் வலிமையை உபயோகித்து வந்தான். ஒருநாள் நள்ளிரவில், ஒரு குழந்தை நதியைக் கடக்க ஆப்ரோவிடம் வந்தது. ஆப்ரோ அக்குழந்தையை தோளில் சுமந்து, அக்கரை செல்லும்பொழுது, குழந்தை வரவர கனம் அதிகரித்து வந்தது. அக்கரை சேர்ந்ததும், ஆப்ரோ அக்குழந்தையை நோக்கி, பார்ப்பதற்கு சிறு குழந்தையாக இருக்கிருய். ஆனுல், மிக கனமாக இருக்கிருயே என்று கேட்டான். அதற்கு அக்குழந்தை 'ஆம்; நான் உலகிலுள்ள, பாபங்களையும், துயர்களையும் அன்பர்களுக்காகச் சுமக்கிறேன். நான் தான் ஏசுகிருஸ்து. நீ அடியவர்களுக்குச் செய்யும் தொண்டையும் பணியையும் மெச்சினேன். இன்று முதல் நீ கிறிஸ்தபர் (Christopher) என்ற திருநாமம் பெற்று. உலகில் அன்பர்களுக்கு தொண்டு செய்து பேரின்பம் அடைவாயாக! என்று வாழ்த்தினுர்.''

இஸ்லாமிய மதத்தில் நம்பிக்கை கொண்டு, இறைவனை அடைந்த பெரியோர்கள் பலர் இருக்கின்றனர்.

நபிகள் நாயகம் அவர்கள் பக்தியினுடைய பெருமையை விளக்கிக் காட்டி இருக்கிருர்கள். ஆண்டவனிடம் பக்தி கொண்ட பக்தனுக்கு உடல் துன்பம்

இல்லை; அவனுக்கு உடல்வலி தெரிவதில்லை என்பதை நன்கு தெளிவாகக் காட்டினார்கள். மக்கம் போரில் அலியின் மார்பில் அம்பு பாய்ந்தது. அந்த அம்பை எடுக்க முடியாமல் அன்பர்கள் தவித்தனர். அப்பொழுது முகமது, மாலை நிமாஸ் செய்யுங்காலத்தில் அவன் மெய்மறந்திருப்பான்; அப்பொழுது அந்த அம்பை எடுத்துவிடுங்கள்! என்று கூறினார். அப்படியே அந்த மெய்யன்பர், அலி மெய்மறந்து தொழும்பொழுது அம்பு எந்தவிதமான துன்பமின்றி, அவருடைய உடலிலிருந்து வெளியேற்றப்பட்டது. இப்படிப்பட்ட மெய்யான பக்தி கொண்டு நாம் தொழுக வேண்டும்.

இறைவன் மீதுள்ள அசையாத நம்பிக்கையினால் அல்லவோ, நபிகள் காப்பிரிய பகைவர்களிடமிருந்து காப்பாற்றப்பட்டார்? அபுபக்கர், முகம்மதுவிடம், ‘கொடிய பகைவர்கள் நம்மை தேடி வருகிறார்களே; நாமிருவரும் தனித்திருந்து என் செய்வோம்?’ என்று முறையிட்டார். அப்பொழுது முகம்மது ஸல்லம் ‘அன்பரே! நாம் தனியாக இல்லை; எல்லாம் வல்ல இறைவன் நம்முடன் இருக்கிறார்; அஞ்சேல்! என்று கூறினார்கள். குகைக்குள் அபுபக்கரும் முகம்மதுவும் இருந்தனர். குகை வாசலில் மூன்று சிலந்தி வலைகள் பிரியாமல் இருப்பது கண்டு, இங்கு மனிதர்கள் உட்சென்றிருக்க முடியாதென்று பகைவர்கள் நினைத்து; திரும்பிப் போயினர். ஆண்டவன் அருள் அன்பர்களைக் காத்தது. எனவே ஆண்டவன் மீது நம்பிக்கை வேண்டும் என்பது புலனாகிறது.

இதுவரை, மத நம்பிக்கையின் அவசியம், பகுத்தறிவு என்பது, என்ன, வேதாந்தம், மதம் என்பது யாது- இதிகாச புராணங்களின் அவசியம் — கடவுள் உண்டா கடவுளை ஏன் மனிதன் வழிபடவேண்டும் — மத நம்பிக்கையால் நமக்குக் கிடைக்கும் நன்மைகள் யாவை — எப்படிப்பட்ட நம்பிக்கை கொள்ள வேண்டும் என்பனவற்றைப் பற்றி — நாம் ஆராய்ந்து அறிந்து கொண்டோம்.

எம்மதத்தவராக இருந்தாலும், அவரவர்கள் மதத்தில், பகுத்தறிவுடன் கூடிய நம்பிக்கை கொள்க! மதத்தின் அவசியத்தை நன்கு உணர்ந்து கொண்டாலே, மதத்தின்மீது அளவுக்கு மீறிய நம்பிக்கையோ, அல்லது அவநம்பிக்கையோ கொண்டிருக்க முடியாது, பகுத்தறிவுடன், மதத்தின்மீது வைக்கும் நம்பிக்கையால், நாம் முழுப் பயனையும் அடையலாம். மத நம்பிக்கை கொண்டவர்களுக்கு எந்தக் குறையும் வராது என்பதைத் தமது அருட்பாவில் இராமலிங்க அடிகளார் உலக மக்களுக்கு எடுத்துக் காட்டுகிறார். மிகவும் அருமையான அருட்பா – பக்தர்கள் படித்து, உண்மை உணர வேண்டிய பாடல்.

"ஐய! நின் சீர்பேசும் செல்வார்வாய் நல்ல தெள்
    ளமுதுண்டு உவந்த திருவாய்;
அப்ப நின் திருவடி வணங்கினோர் தலைமுடி
    அணிந்தோங்கி வாழுந்தலை;
மெய்ய! நின் திருமேனி கண்ட புண்ணியர் கண்கள்
    மிக்க ஒளிமேவு கண்கள்;
வேல! நின் புகழ் கேட்ட வித்தகர் திருச்செவி
    விழாச்சுபங் கேட்குஞ் செவி;
துய்ய! நின் பதமெண்ணு மேலோர்கள் நெஞ்சம்
    மெய்ச் சுகரூபமான நெஞ்சம்
தோன்றல்! உன் திருமுன் குவித்தபெரியோர் கைகள்
    சொர்ணமிடுகின்ற கைகள்;
சையமுயர் சென்னையில் கந்த கோட்டத்துள் வளம்
    தலமோங்கு கந்தவேளே;
    தண்முகத்துய்ய மணி உண்முகச் சைவமணி
    சண்முகத் தெய்வ மணியே!"

தெய்வ வழிபாடு செய்பவர்களுக்கு உலகத்தில் எல்லா வரங்களும் கிடைக்குமென்று தனது முருகன் வழிபாட்டுப் பாடல் மூலமாக வள்ளலார் நமக்கு உணர்த்தியிருக்கிறார்.

"நீருண்டு, பொழிகின்ற காருண்டு விளைகின்ற
நிலமுண்டு பலனுமுண்டு
நிதியுண்டு துதியுண்டு மதியுண்டு கதிகொண்ட
நெறியுண்டு நிலையுமுண்டு
ஊருண்டு பேருண்டு மணியுண்டு பணியுண்டு
உடையுண்டு கொடையுமுண்டு
உண்டுண்டு மகிழவே உணவுண்டு சாந்தமுறும்
உளமுண்டு வளமுண்டு
தேருண்டு கரியுண்டு பரியுண்டு மற்றுள்ள
செல்வங்கள் யாவுமுண்டு
தேனுண்டு வண்டுறு கடம்பணியும் நின்பதத்
தியானமுண் டாயிலரசே
தாருண்ட சென்னையில் கந்த கோட்டத்துள் வளர்
தலமோங்கு கந்தவேளே
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே"

அன்பர்களே! மத நம்பிக்கையின் அவசியம் பற்றி நாம் அறிந்து கொண்டோம். நீங்கள் எம்மதத்தைச் சார்ந்தவர்களாக இருந்தாலும் சரியே, உங்கள் மதத்தில் நம்பிக்கைகொண்டு இறைவனை வழிபட்டு, அவன் அருள் பெறவேண்டும் அறிவு வளர்ந்தபின், மதத்தின் உதவி இல்லாமல் நாம் ஆண்டவனை உணர்ந்து பேரின்பம் அனுபவிக்கலாம். பேரின்பம் அனுபவிப்பது என்பது தான் மனித வாழ்க்கையின் இலட்சியம்– குறிக்கோள். கடவுளை அடைவதும், பேரின்பம் பெறுவதும் ஒன்றே, நம்மை பேரின்பத்திற்கு அழைத்துச் செல்லும் மதத்தின் மீது நம்பிக்கை கொள்வோமாக.

எல்லாம் வல்ல இறைவன் அன்பர்களுக்கு
அருள் புரிவாராக.

